# இன்னொரு சிகரம்

கவிஞாயிறு தாராபாரதி




இலக்கியவீதி
விநாயக நல்லூர்
வேடந்தாங்கல் அஞ்சல் - 603 314

கவிஞாயிறு தாராபாரதி

# இன்னொரு சிகரம்

மரபுக்கவிதைத் தொகுப்பு

தொகுப்பாசிரியர் :
ஓவியக்கவிஞர் மலர்மகன்

முதற் பதிப்பு :
திருவள்ளுவர் ஆண்டு 2034 மார்கழி - 31.12.2003

☐ டெம்மி ☐ 112 பக்கங்கள் ☐ விலை ரூ.40.00 ☐

பதிப்பாசிரியர் :  இனியவன்

அட்டை வடிவமைப்பு : மு. கலைவாணன்

ஒளி அச்சு :
கலை கணினியகம்
7 - துரைசாமி சாலை, ஐஸ்வர்யா வளாகம்,
தியாகராய நகர், சென்னை - 600 017 ☎ 52128490

அச்சு :
மணிவாசகர் ஆஃப்செட் பிரிண்டர்ஸ்
சென்னை - 600 021

வெளியீடு:
இலக்கியவீதி
விநாயக நல்லூர்
வேடந்தாங்கல் அஞ்சல் - 603 314

# சொற்களில் வடித்த சுடுசோறு

ஓவியக்கவிஞர் மலர்மகன்

கவிஞாயிறு தாராபாரதி என் இளவல். எதுகையாய்ப் பிறந்து மோனையாய் என்னை முந்தியவர். தாராபாரதி இன்று தமிழ் கூறும் நல்லுலகிற்குத் தெரிமுகம் என்றால், அவர் இலக்கியவீதி இனியவனின் அறிமுகம். இளைய கவிஞர் பலருக்குத் துறைமுகம்.

'இன்னொரு சிகரம்' - தம்பி தாராபாரதியின் மறைவுக்குப் பின் வெளிவரும் மூன்றாவது நூல். ' தாராபாரதி கவிதைகள்' - 2001, 'பூமியைத் திறக்கும் பொன்சாவி' - 2002 என்னும் நூல்களை வெளியிட்ட இலக்கியவீதியே இந்த நூலையும் அறிமுகப்படுத்தி அவரது நினைவைச் சிறப்பிக்கிறது; புகழைச் சேமிக்கிறது.

காகிதங்களில் இறைந்து கிடக்கும் கவிஞாயிறின் சுருக்கெழுத்து வார்த்தைகளுக்கும், கிறுக்கெழுத்து வரிகளுக்கும் நூல் உருக் கொடுக்கும் முயற்சியை என் கடமையாக எண்ணுகிறேன். இதை, தம்பியின் புகழ் வயதை நீட்டும் தவமாகப் பண்ணுகிறேன்.

தாராபாரதி - பிற்போக்குச் சக்திகளின் பிடரியைப் பிடித்து உலுக்கி, முற்போக்குக் கருத்துகளை முன் வைப்பவர். கடையனுக்கும் கடைத்தேற்றம் வேண்டும் என்னும் இடையறாத தாகம் இவரது வரிகளின் நடை வேகம்.

துருப்பிடித்த வார்த்தைகளைத் தூரத் தள்ளி, சுறுசுறுப்புச் சொற்களுக்குச் சூடேற்றியவர். இவருடைய கவிதை வரிகள்; வீரியம் மிக்க சூரிய விதைகள்; இருளை வேரறுக்கிற வெளிச்ச விழுதுகள்.

இவர் கவிதைகளில், நிறுத்தக் குறிகள் கூட நெருப்புத் திரிகள்!

இவரது கவிதைகள், சொற்களில் வடித்த சுடுசோறு... சமுதாயம் பசியாறும். 'இன்னொரு சிகரம்' இதை மெய்ப்பிக்கும்.

என்னுடைய இந்த உழைப்புக்கும், இலக்கியவீதி இனியவனின் அழைப்புக்கும் எப்போதும் ஆதரவளித்து வரும் தமிழ் கூறும் நல்லுலகிற்கு நன்றி.

அன்புடன்,
**மலர்மகன்**

**11 - ஆழ்வார் நகர் முதல் தெரு,
உள்ளகரம், நங்கை நல்லூர்,
சென்னை - 600 061 ☎ 2224738**

# இன்னொரு
# பாரதி நெருப்பு

**ஐஷ்வர்யன்**

கவிஞர்களை நேசிக்கிற நான், கவிதைகளை வாசிப்பதில்லை. இந்த முரண்பாடு வெட்கம் தருகிறது. அதற்காகத் தலை குனிகிறேன்.

ஒரு புனை கதை எழுத்தாளனுக்குக் கவிதை மீது பிடிப்பில்லாத காரணம் இன்னும் பிடிபடவில்லை!

குப்பையைக் கூட கிளறி வாசிக்கத் துடிக்கும் எனது அலாதி உரைநடை மோகம்தான் கவிதை வாசிப்பிற்குத் தடையாக இருக்குமோ?

ஆனாலும், கவிஞாயிறு தாராபாரதியை வாசிக்க வாய்த்த பிறகு தீர்ப்பளிக்கிறேன்: ''கவிதை ரசனையற்றவருக்குக் கதை எழுத மட்டுமின்றி... வாழவுமே தகுதியில்லை!''

சமீபகாலமாய் அங்கொன்றும் இங்கொன்றுமாக மனுஷ்யபுத்திரன், மகுடேஸ்வரன் என - சில கவிதைச் சிதறல்களில் நனைந்திருக்கிறேன்... இதயம் குளிர்ந்திருக்கிறேன்.

ஆயினும், சத்தமாய் யோசிக்கையில், நான் முழுமையாக வாசித்த ஒரே தொகுப்பு பாரதியார் கவிதைகள் மட்டும் தானோ? இருக்கலாம் - அது, நேற்றுவரையான நிஜமாக!

ஆனால், இன்று - இதோ, இன்னொரு பாரதி நெருப்பு என்னைப் பற்றிக் கொண்டுவிட்டது!

'தீக்குள் விரலை வைத்தால்...' என மகாகவி மலைத்தாரே - அப்படி ஓர் அறிவு விழிப்பு; ஆனந்த ஆளுமை!

கவிஞாயிறு தாராபாரதியின் 'இன்னொரு சிகரம்' என் கைக்கு வந்தபிறகு, அது, என்னுள் இவ்வளவு பெரிய மாற்றத்தை விளைவிக்கும் என எதிர்பார்க்கவே இல்லை!

இவை, சம்பிரதாயச் சொற்கள் அல்ல; சத்தியம். ஆம்... இந்த நூலை நான் ஒரே மூச்சில் (சு) வாசித்துவிட்டேன்!

நிச்சயமாக, இது முன்னுரைக்கான நிர்பந்த வாசிப்பல்ல. மனம் ஒவ்வாததை ஒதுக்கவும், கட்டாயங்களில் விடைத்து நிமிரவும் கற்றுக்கொண்ட பின்தானே 'பொறியாளன்' போர்வையை உதறி- 'எழுத்தாளன்' தோல் அணிந்து பாரதம் திரும்பியுள்ளேன்!

ஆக, இந்த முன்னுரையும் சரி, 'இன்னொரு சிகரம்' வாசிப்பும் சரி... நிர்பந்தமே அல்ல. மாறாக, கவிஞாயிறுக்கான என் இதயபூர்வ 'நன்றிக் கடனே!'

இலக்கியவீதி இனியவன் ஐயாவிற்கே தெரியாத ரகசியம்தான் இந்த நன்றியுணர்வு!

ஆனால், அவருக்குத் தெரிந்த நிச்சய உண்மை: 'ஐஷ்வர்யன் என்றுமே கவிதைகளையும், தாராபாரதியையும் பதிவாகிற அளவு சந்தித்ததே இல்லை!'

பிறகு, எப்படி இந்த நன்றியுணர்ச்சி? ஏன் இந்த நன்றிக் கடன்?

நான், 'மண்ணின் மைந்தன்' மட்டுமல்லாது 'மண்ணில் மைந்தன்' ஆகவும் வாழ்பவன். எனவே, யதார்த்தமாய் பூமியில் கால் பதித்தே உள்ளதைச் சொல்கிறேன்:

'வயிற்றுக்கான பிரயாணம் போதும். இனி மனத்துக்காகவே மிச்சப் பயணம்!' என எனக்கே அதிசயமான உறுதியோடு இளமையின் மையப்பாதையில் திசை மாறிப் புதியபாதையில் இன்று பயணிக்கிற போது, மிகுதியாக மனம் துள்ளுகிறது!

என்றாலும், அவ்வப்போது வயிறு துவளுகிற நிலை! அத்தனை திட்டமிடலும் தேடல்களும் தாண்டி, பலமுறை கணக்குகள் பிழையாகிப் பரிதாபமாய்க் கீழே விழுந்து விடுகிறேன்.

ஆனால், ஒருமுறை கூட, ஒரு கணம் கூட உடைந்து கிடந்தேனில்லை; கிடக்க விடப்படவும் இல்லை.

அப்படி ஓர் அசுர வேகத்தோடு ஒவ்வொரு முறையும் இரு கரங்கள் உறுதியாய்த் தூக்கி நிறுத்துகின்றன! நன்றிக்குப் பதிலாக, சிணுக்கத்தோடே தூக்கியவரை நோக்குகிறேன்.

தாங்கிய தாராபாரதியோ- சினந்து எரிக்கிறார், பார்வை யாலேயே!

**'கிழக்கு தானாய் வெளுக்காது – அதைக்**
**கிழிக்கா விட்டால் சிவக்காது!'**

கேட்டமாத்திரத்தில் மனத்துள் ஓராயிரம் விரல்கள் முளைத்து உத்வேகம் பிறந்தாலும், வாழ்வை வெல்லும் வழி அறியாது கை பிசைகிறேன். உடனே, விழி நெருப்பு ஒளித்து - இதய ஈரம் காட்டிய தாராபாரதி, தன் இரு கைகளால் என் முகம் ஏந்துகிறார். மந்திரம் உச்சரிக்கிறார்:

**'வெறுங்கை என்பது மூடத்தனம் – உன்**
**விரல்கள் பத்தும் மூலதனம்!'**

யார் சொன்னது, எனது ஈரெட்டு வயதில் மறைந்த எந்தையோடு 'கல்வி போம்' என்று? இதோ, ஐயெட்டு வயதில் வாழ்வு மந்திரமே கிடைத்து விட்டதே!

இனி எனக்குத் தளர்ச்சி இல்லை; வீழ்ச்சியும் இல்லை.

இலட்சிய எவரெஸ்டில் ஏறும்வரை, பத்துவிரல் பற்றிச் சரக்கு மூட்டை இறக்கவும் தயங்காத மன உறுதி பெற்றுவிட்டேன்!

இனி, எவரேனும், 'எழுத்து... ஊடக மோகத்தால் ஏட்டுப் படிப்பையும், பாஸ்போர்டையும் உதறி விட்டாயே?' என அங்கலாய்க்கையில், போர் வீரனாய்ப் புன்னகைக்கப் போவது நான் அல்ல... என்னுள்ளிருக்கும் தாராபாரதியே!

**'எத்தனை உயரம் இமயமலை! – அதில்**
**இன்னொரு சிகரம் உனது தலை!'**

இப்போது சொல்லுங்கள்: இந்த ஒரு மந்திரதிற்காகவே நான் மட்டுமின்றி... முன்னேறத் துடிக்கும் இளைஞர்கள் மட்டுமின்றி... வாழத்துடிக்கும் அத்தனை மனிதர்களுமே கூட நன்றியுணர்வோடு தாராபாரதி கவிதைகளுக்கு மேன்மையுரை சமர்ப்பிக்கலாம்தானே?

**நா**டு பல கண்டவன்... வேதம் பல கற்றவனும் கூட.

எனவே, ஒவ்வொரு முறை தொழும்போதும், உள்ளுக்குள் பதறுகிறேன்:

'நாகரிக உச்சத்து மேனாட்டு மனிதர்கள் கூட, பக்தியில் ஏன் 'மதம்' கொள்கிறார்கள்?'

'எம்மதமும் சம்மதம்' என்றில்லா விட்டாலும், 'உன் மதம் உனக்கு... என் மதம் எனக்கு' என்றாவது ஆகலாமே?

பின் ஏன் இத்தனை தீப்பந்தங்களும், வீச்சரிவாள்களும்?

தமிழ் மந்திரத்திற்காக, தாராபாரதி எழுதிய கவிதையின் ஒரு வரியில் மதங்களின் மொத்த நல்லிணக்கத்திற்கும் வழி சொல்லிவிடுகிறாரே!

**'வேதம்என்ப தென்ன**
**வெளிச்ச மனம்தானே!'**

இறைவனுக்காகத்(?) தீப்பந்தம் ஏந்தும் உள்ளங்களில், அவரவர் சார்ந்த வேதமே முழுமையாய் நுழைந்தால் போதுமே!

**'பாருக்குள்ளே நல்ல நாடு**
**எங்கள் பாரத நாடு'**

என, அன்று என் பால்யத்தில், பாரதி ஒலியின்பமாய்த் தந்த அதே அபரிமித தேசபக்திப் பரவசத்தை - இன்று, தாராபாரதி கருத்தின்பமும் கலந்து தருகிறாரே!

**'புதுமைகள் செய்த தேசமிது!**
**பூமியின் கிழக்கு வாசலிது!'**

தாராபாரதி எப்படி நடைமுறை வாழ்வியல் மந்திரம் ஓதியிருக்கிறார் என்று, இந்த முன்னுரையின் 'முன்னுரை' யிலேயே சொல்லிவிட்டேன்.

பிற கவிஞர்களுக்கு எளிதில் எட்டாத அந்த அதீதச் சிறப்பு மனிதாபிமானமும், தொலைநோக்கும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகளும் தாராபாரதிக்கான வரங்கள்!

அவை, மண் உள்ள மட்டும் விண் அளவு புகழை அவருக்காய்ப் பாடும்.

'சூரியனே முளைக்காத கிழக்கு' என்று கண்தானத்திற்காக அவர் குரல் கொடுக்கும்போது, தலைப்பிலேயே கவித்துவம் பொழிகிறது. அந்தக் கவிதை வரிகளிலோ கண்ணீர் வழிகிறது!

**'முதற் பதிப்பு பழுதானால்**
**என்ன ? நீங்கள்**
**மனம் வைத்தால் மறுபதிப்பு**
**செய்ய லாமே!'**

நிச்சயம் செய்வோம், தாராபாரதி ஐயா!

கவிஞாயிறு ஓர் அபூர்வ அவஸ்தையோடுதான் கவிதைகள் வடித்திருப்பாரோ? ஒரு ரசிகனாய் அழகியல் சொட்டச் சொட்ட நான்கு வரி எழுதிவிட்டால், உடனே தத்துவ ஞானியாய் சமுதாய அக்கறைக் குட்டலோடு நான்கு வரி எழுதிவிடுகிற முனைப்பு - வாசித்து, யோசித்து, வியந்து பாராட்டத்தக்கது!

**'வெண்ணி லவுக்கு**
**விடுமுறை நாளில்**
**வெட்ட வெளியும் அழகுதான்'**

எனத் தாலாட்டி உறக்கியவர் -

**'கண்ணில் அழகு இருந்தால் பூவின்**
**காம்பிலும் அழகைப் பார்க்கலாம்!'**

எனத் துயில் விழிக்க வைக்கிறாரே!

அராஜக அரசியல்வாதிகள், இதற்கு முன்னர் - இப்படி நுட்பமாக அடையாளம் காட்டப்பட்டிருக்கிறார்களா? சந்தேகம்தான்!

**'தேர்களை உடைத்துத்**
**தீக்குச்சி செய்பவர்கள்**
**வேர்களைப் பறித்து**
**விறகாக் குபவர்கள்!'**

எரிமலையாய் முழங்குகிற இதே கவிஞர், பல பொழுதுகளில் கண்ணீர் கசியப் பிரார்த்திக்கையில் - நம் கைகளும் வானம் நோக்கி உயர்ந்துவிடுவது தவிர்க்க முடியாத மனிதாபிமானச் செயலே!

**'தூக்குக் கயிறுகள்**
**போகி நெருப்பினில்**
**தீக்குளிக்கும் நாள்**
**தித்திக்கின்ற நாள்'**

**'பூச்சீர் இவர்களெல்லாம்**
**பொன்சீர் இல்லாமல்**
**காய்ச்சீரா யிருக்கின்றார்**
**கனிச்சீரா யாவதெந்நாள்?'**

**'கல்லுடைக்கும் கந்தன்களும்**
**கற்கச் செல்லலாம்**
**கட்டைவிரல் கையெழுத்து**
**கற்றுக் கொள்ளலாம்'**

'மண்ணிலிருந்து கேட்டால் தாமதமாகிவிடுமோ' என்றெண்ணி, விண் சென்று விண்ணப்பிக்கும் தாராபாரதியின் பிரார்த்தனைகளை விரைந்து நிறைவேற்று, இறைவா!

எவ்வளவுதான் பிரியப்பட்டவரோடும்- என்னதான் மனமொத்துக் கை கோத்து அளவளாவிப் பயணிக்கை யிலும், ஒரு கட்டத்தில் ஒலிகள் அடங்கி இருவரும் வெவ்வேறு திசை பார்ப்பதுண்டு.

அதுபோல் - கவிதையோ, கதையோ உதிரிகளாய் இன்றி ஒரே படைப்பாளியின் தொகுப்பாய் வாசிக்க நேரிடுகையில் எங்கேனும் மறுபடி மறுபடி பதிவு செய்யப்பட்ட அதே அலைவரிசை... அதே அக - முக எதிர்கொள்ளலால் அயற்சி நிகழ்ந்துவிடுவதுண்டு!

அப்படி - ஒரு நெருடலைக் கூட ஏற்படுத்தி விடாத வண்ணம் நெஞ்சில் நிலைக்கும் வானவில்லாக...

வெவ்வேறு வர்ண உணர்வுக் கலவையாக... உயிர்ப்புள்ள மூலிகை மலர்த்தோட்டமாக 'இன்னொரு சிகரம்' உருவாகியுள்ளது!

இதை வெளியிடும் இலக்கியவீதி இனியவன் அவர்களின் அற்புதப்பணி அளவில்லாத பாராட்டுக்குரியது.

குறிப்பாக -

பாரதி, பாரதிதாசன், மகாத்மா, கர்மவீரர், பெரியார், அண்ணா, அம்பேத்கர் புகழ்பாடும் கவிதைகளை இயற்றியதற்கும், இணைத்ததற்கும் 'தமிழ் இலக்கிய வரலாறு' - படைப்பாளர் தாராபாரதி, தொகுப்பாளர் மலர்மகன், பதிப்பாளர் இனியவன் புகழைப் பாடியே தீரும்!

கணிப்பொறியிலிருந்து மீளுமுன்னர், மறுபடி கை விரிக்கிறேன்... விரல்களைப் பார்க்கிறேன்.

என் மூலதன விரல்கள்... வெளிச்ச விழுதுகளாய்... இமயத்துக்கும் மேலான சிகரங்களாய்... இல்லையில்லை - பத்து சூரியன்களாகவே ஒளிர்கின்றன!

அத்தனை 'செவ்வான வட்டத்து'ள்ளும், தாராபாரதி முகங்களே!

நம்மால் போற்றப்படுபவர் முகங்களை, அகத்துள் காண்பது சாத்தியமே!

ஆனால், கையிலேயே காண்பது?

'தாராபாரதி!... நீங்கள் - என்றும், என்றென்றும் வாழ்வீர்கள்!

எத்தனையோ, எத்தனையோ பேரை வாழ வைப்பீர்கள்!'

தாராபாரதியைப் படிப்போர்க்கு, வெற்றி நிச்சயம்!

இது, இதய சத்தியம்!

**ஐஷ்வர்யம் பதிப்பகம்**
21-லோகநாதன் நகர் முதல் தெரு,
குளைமேடு, சென்னை- 600 094.
தொலைபேசி எண் : 236 10 194

நன்றியுடன்,
**ஐஷ்வர்யன்**

## தாயே, தமிழே!

நினைவாலும் கனவாலும்
எனையாளும் தமிழ்மகளே

தினைமாவைவிட இனிக்கும்
தேமாவும் புளிமாவும்
பனையோலை யில்கண்டு
பதநீர் குடித்தவளே!

உயிரே! மெய்யே!
உயிர்மெய்யாய் இருப்பவளே
தமிழே, உனக்கு
உயிர் - மெய்யாய் இருக்கிறதா?

குற்றுயிராய்க் கிடப்பவளே
ஊசலாடும்
குறையுயிரில் வாழ்பவளே
சிற்றுயிரைத் தந்துன்னை
எழுப்புதற்கு
சிலிர்த்திருக்கும் உன்மக்கள்
சிறுத்தைக் கூட்டம்!

## பனை ஓலை உயில்

வள்ளுவனே-

மூலதனம் உன்னுடைய
முப்பால்; அதை எமக்கு
ஓலைச் சுவடியிலே
உயிலெழுதி வைத்தவனே!

தாய்ப்பால் குடிக்காமல்
தமிழ்ப்பால் குடித்தவன்நான்;
வாய்ப்பாலாய் முப்பால்
வார்த்தவனே, வணங்குகிறேன்!

பனையோலை நறுக்கில்
ஈரடிவெண்பா - எமக்கு
தலைவாழைக் குருத்தில்
தங்கச் சம்பா!

உலகத்தின் சுற்றளவு
ஒன்றே முக்காலடியில்
அளவெடுத்து வைத்தவனே
அருந்தமிழ்ப் புலவனே

வணங்குகிறேன்!

## கவரிமான் சாதி

கவரிமான் சாதி யாகக்
கவிஞர்கள் வாழ்ந்த தால்தான்
கவரிகள் வீசி அந்நாள்
காவலர் போற்றி நின்றார்!

பண்பாடும் ஆசிரி யப்பா
பாதத்தில் தலையை வைத்து
வெண்பாமேல் வெயில் படாமல்
வெண்கொற் றக்குடை பிடித்தார்!

நெற்றிக்கண் திறந்த போதும்
நேரெதிர் நிமிர்ந்து நின்று
குற்றமென் றான்நக் கீரன்
குனிந்தானா கடவு ளுக்கு?

கொற்றவன் தவற்றைக் கோவூர்
கிழார் சுட்டிக் காட்டவில்லை?
பெற்றதோர் பரிசி லுக்குப்
பெருஞ்சித் திரன்தாழ்ந் தானா?

மன்னவன் மதிப்பைப் பெற்றார்
மாங்குடி மருதன் - நேரில்
தென்னவன் தூதாய்ச் சென்று
திருத்தங்கள் செய்தார் அவ்வை!

இறைவனைக் கூடச் சாடி
எழுதிற்றே வள்ளுவன் கை!
துறவிதான் இளங்கோ - ஆனால்
துறந்தாரா தமிழ் வீரத்தை?

பரிசிலைப் பெறும் பொருட்டு
பாயிரம் யாத்த தில்லை;
அரசினை வாழ்த்திப் பாடி
அணிந்துரை எழுத வில்லை!

வெற்றிலைச் சிவப்புக் காக
வெண்பா பாட வில்லை!
அந்தப்புரத் தாதி யர்க்கு
அந்தாதி பாட வில்லை!

புகழ்கொண்ட மன்னர் அந்நாள்
புலமைக்குத் தலைமை செய்ய
இகல்வேந்தர் செங்கோ லுக்கு
எழுதுகோல் பாடம் சொல்ல

பகைவென்ற வீர வாளைப்
பனையோலை வென்ற காலம்!
மகுடங்கட் காக யாரும்
மகுடிகள் ஊத வில்லை!

## தோரண வாயில்கள்

வீரத்தின் விதைக்கோட்டை
செங்குட்டுவன்;
வெற்றியைத் தமிழர்க்குப்
பங்கிட்டவன்!

வடக்கு நரிகளின்
வால்களை நறுக்கி
அடக்கிய தெற்குப்
படைக்குல மறவன்!

சொல்லால் பழித்த
கனக விசயர்க்குக்
கல்லால் பாடம்
புகட்டிய நாயகன்!

கல்லுக்கு விலை
கனக விசயர் தலை!
கற்புக்கு விலை
கண்ணகி சிலை!

●

இமய மலையில்
மீன்கொடி - அது
எங்கள் தமிழர்
முதற் கொடி!

ஆரியப் படைகளைச்
சாடிய சிங்கம்
சீரிய நெடுஞ்செழிய
பாண்டியத் தங்கம்!

அவன் ஏற்றிய
மீன் கொடி -

புகழை விண்ணின் முகத்தில் எழுதி
பூமித் தமிழனின் இசை பாடும்;
பகலும் இரவும் விண்மீன் கூட்டம்
பாண்டிய மீனுடன் விளையாடும்!

●

கரிகாலன்கட்டி வைத்த
கல்லணை;
காவிரிப்பெண் ஓய்வெடுக்கத்
தலையணை!
கட்டுமானப் பணியில் புதுச்
சிந்தனை;
காலம்வென்று நிற்கும் தமிழன்
நீரணை!

●

முடிமன்னன் கொடித் தேரை
முல்லைப் பந்தல் ஆக்கி
கொடிமுல்லை யைத் தனது
மடிப்பிள்ளை போல் நினைத்தான்
முல்லைக்குத் தேர்தந்த
வள்ளல் பாரி!

ஊர்க் கொடை வழங்கிய போது
உள்ளம் களித்த வள்ளல் - இந்தத்
தேர்க்கொடை வழங்கிய நாளில் - 'நான்
திரும்பவும் பிறந்தேன்' என்றான்!

●

எறிகின்ற ஈட்டி கண்டு
இமைத்தாலும் இழுக்கு என்று
மறவன்தன் விழிவாசல்
மணிக்கதவை மூடவில்லை!

கண்தைக்க வந்தாலும்
கண்ணிமையை மூடாத
திண்ணிய நெஞ்சுரத்தைத்
திருக்குறள் படம்பிடிக்கும்!

கூர்வேலை யானைமேல்
குறிபார்த்து எறிந்தவன்மேல்
ஓர்வேலைப் பாய்ச்சினான்
பகைவன்! இவன் மார்பில்

2

தைத்தவேல் களிப்போடு
தான்பறித்தான்; யானைமேல்
தன்வேல் பாய்ந்ததனைச்
சாய்த்ததேஎனும் மகிழ்வோடு
சாய்ந்தான் புகழோடு!

கொடியேந்திப் போரிட்டு
குற்றுயிராய் விழுந்தவனை
மடியேந்தி மன்னன் விழி
மல்கிய நீர்கண்டு - வீரன்

இறந்தான் மகிழ்வோடு!
இப்படியோர் சாவு எனில்
மரணப் பிச்சையோடு
மடிவதிலும் இன்பந்தான்!

## தமிழின் மிச்சமாயிரு!

மனிதா, நீ-
தமிழன் எச்சமாய் இரு!
தமிழின் மிச்சமாய் இரு!

நரம்பிலே தாய்ப்பால் இல்லை;
நாக்கிலே தமிழ்ப்பால் இல்லை!
வரம்புகள் தாய்மொழிக்கு;
வாய்மொழி வாடகைக்கு!

இமய உச்சியில் பறந்த கொடி
ஏழு கடல்கள் அளந்த கொடி
உலகக் கூரையில் உயர்ந்த கொடி
உண்மைத் தமிழர் நட்ட கொடி!

மனிதா, நீ-
தமிழன் எச்சமாய் இரு;
தமிழின் மிச்சமாய் இரு!

## செந்தமிழா, ஒரு வார்த்தை!

செந்தமிழா ஒருவார்த்தை
நில்லடா - உன்
சிந்தனையைப் புதுப்பித்துக்
கொள்ளடா!

அணுப்பொறியில்
உன்அறிவைத் தீட்டு - நீ
அறிவியலில்
உன்புகழை நீட்டு!
கணிப்பொறியில்
புதுமைகளைக் காட்டு - உன்
கைத்திறனை
உலகறியக் காட்டு!
- செந்தமிழா...

தொழில் நுட்பம்
உன்தோளைத் தொழுதிடும் - பிற
துறையாவும்
உன்காலைக் கும்பிடும்!
மழை உனது
குரல்கேட்டுச் சுரக்குமே - வான
மண்டலம் உன்
விரலசைவில் நடக்குமே!
- செந்தமிழா...

கனவல்ல கனவல்ல
தமிழனே - இது
கற்பனையின்
உச்சமல்ல நண்பனே!
புயல் வேகம்
உன் நரம்பில் வரட்டுமே
புதுவேகச் சிந்தனைகள் பிறக்குமே!
- செந்தமிழா...

செவ்வானம்
உனைக்கேட்டு விழிக்குமே - அந்தச்
செவ்வாயும்
உன்தமிழைப் படிக்குமே!
ஒவ்வாத
போர்க்குணம் மறையுமே
உலகெங்கும்
மனிதநேயம் மலருமே!
- செந்தமிழா...

# சூரியன் முதுகில் பஞ்சுப் பொதியா?

ஒன்றுபடுவோம், தமிழினமே;
ஓடி மறையும் பகையினமே!
ஏமாளியாய் நீ
இருந்தது போதும் - இது
போராளியாகப் புறப்படும் நேரம்!

பஞ்சுப் பொதிகள்
சூரியன் முதுகில்
பல்லக்கேற விரும்புவதா? - பழம்
பஞ்சாங் கங்கள்
தமிழன் வீட்டுப்
பண்பா டுகளை விழுங்குவதா?

தமிழ்மொழி ஆளத்
தமிழினம் வாழத்
தடைகள் எத்தனை வரட்டுமே - நம்
இமைமயிர் கூட
ஈட்டிக ளாகி
எதிரிப் படையை விரட்டுமே!

எழுந்தால் கொடிமரம்
விழுந்தால் அடியுரம்
இதுதான் தமிழன் எனக்காட்டு!

பொறுத்தால் பனிமலை
கொதித்தால் எரிமலை
அதுதான் தமிழ்க் குணம் நிலைநாட்டு!

ஒன்று படுவோம்
தமிழினமே!
ஓடி மறையும் பகையினமே!

## கர்ப்பூரத் தட்டுக்குத்
## ——————————தமிழ் கற்றுத் தா!

'வழிபாடு தமிழிலா?
வரலாமா?' - என்று
மொழிபேதம் செய்து
முட்டுக் கட்டை யிடுவார்!

ஓதும்மந் திரத்தில்
ஊனமா நம்மொழிக்கு?
வேதம்என்ப தென்ன,
வெளிச்ச மனம்தானே!

திருக்கோயில் மணிஓங்கி
தமிழ் பேசாதா? - அது
தேவாரத் தமிழ் இறைவன்
செவி ஏறாதா?

தாழ்திறவா மணிக்கதவம்
தமிழ்கேட்டுத் திறந்ததே!
வாய்திறவாத் தமிழனே
வழியறியா மயக்கமென்ன?

உண்மையில்நீ அஃறிணையா?
ஒப்பனையால் உயர்திணையா?
கண்ணிமைகடந்து கருமணி
களவு போகிறதே!

உள்ள எழுச்சியின்றி
உறங்கும் தமிழனே
பள்ளியறை பாசறையா?
பாய்சுருட்டி வா!

கருவறையைத் தமிழ்தொட்டால்
தீட்டாம்? வாவா
கர்ப்பூரத் தட்டுக்குத்
தமிழ் கற்றுத்தா!

## தமிழ்ச் சாதி

யாரடா கீழ்ச்சாதி
எவனடா மேல்சாதி
எல்லாரும் ஒருசாதிதான்!

ஊரிலே தெருவிலே
உட்பகை இனியில்லை;
ஒருசாதி - தமிழ்ச்சாதிதான்!

என்ரத்தம் உன்ரத்தம்
இரண்டுமே தமிழ்ரத்தம்
எதற்காக நமக்குள் யுத்தம்?

உன்சுற்றம் என்சுற்றம்
ஊர்முற்றும் நம்சுற்றம்
ஒன்றடா தமிழன் முற்றம்!

எத்தனை தலைச்சாதி
இடைச்சாதி பிரித்தவன்
யாரவன்? ஆரியன்தான்! - அந்த

எத்தனின் சூட்சிகள்
எத்தனை! அவற்றைநீ
எரிக்கின்ற சூரியன்தான்!

## பூமியின் கிழக்கு வாசல்

புதுமைகள் செய்த தேசமிது!
பூமியின் கிழக்கு வாசலிது!

அறிவைத்தேடி
வந்தோர்க் கெல்லாம்
அரிச்சுவடியினை
விரித்ததிது!

பொருளைத்தேடிப்
புகுந்தோர்க் கள்ளி
பொக்கிஷம் தந்த
பூமியிது!

அருளைத் தேடி
அலைந்தவர்க் கிங்கே
ஆன்மிக வாசல்
திறந்ததிது!

புதுமைகள் செய்த
தேசமிது!
பூமியின் கிழக்கு
வாசலிது!

வெண்பனிச் சுவரில்
எழுதிய புகழை
விண்மீன் கூட்டம்
வாசிக்கும்!

எண்டிசை யாவும்
பண்டைய மரபின்
இந்தியக் காற்றைச்
சுவாசிக்கும்!

எதையும் தேடிப்
போகாமல்
எங்கும் எவரையும்
நாடாமல்

புதுமைகள் செய்த
தேசமிது!
பூமியின் கிழக்கு
வாசலிது!

# சங்கமத்தில் அழுக்குமுண்டோ?

மூளைக்கு அறிவூட்டம்
தந்து கொண்டும்
முயற்சிக்குச் சுயவோட்டம்
தந்து கொண்டும்

காலைக்கும் மாலைக்கும்
மாறிக் கொண்டும்
காலுக்கும் கோலுக்கும்
பணிந்து கொண்டும்

எங்கெங்கும் காசுக்கே
ஏற்றம் தந்தும்
ஏழைகளைச் சாக்கடையாய்
மதிக்கின் றோமே!

கங்கைநதி சாக்கடையை
ஒதுக்க லுண்டா?
கலந்தபின்பு சங்கமத்தில்
அழுக்கு முண்டா?

தன்னினத்தைத் தன்போல
மதித்த லாலே
தரமுயர்ந்து வானத்தே
பறக்கும் புட்கள்!

தன்னினத்தை அன்னியமாய்
ஒதுக்க லாலே
தரையுயர்ந்து (?) வாழுவது
மனித மந்தை!

கண்ணைப்போல் தன்னினத்தைக்
கருத வேண்டும்
கௌரவமாம் மேல்பூச்சை
அகற்ற வேண்டும்

என்னினத்தான் என்றணைத்துக்
கொள்ள வேண்டும்
ஏழைகளின் தொண்டினிலே
சிறக்க வேண்டும்!

## சூரியனே முளைக்காத கிழக்கு

புறவெளிச்சம் கருக்கொள்ளா
மலட்டுக் கண்கள்;
பொலிவிழந்த முகத்தில்இரு
பூச்சி யங்கள்!

பொறியிழந்த என் வாழ்க்கைச்
சரித்தி ரத்தில்
பூகோளம் பார்த்தறியா
விழிக்கோ ளங்கள்!

கற்பனைகள் எனக்குண்டு
வடிவம் இன்றி!
கனவுகளும் வருவதுண்டு
வண்ணம் இன்றி!

கற்றவைகள் நெஞ்சிலுண்டு
காட்சி இன்றி;
கலங்குகிறேன் பார்வைக்கு
மீட்சி இன்றி!

இருளென்ன பகலென்ன
எனக்கு? தினமும்
இருபத்து நான்குமணி
இருட்டு! விழியில்

சுரக்கின்ற கண்ணீர்தான்
இருப்பு! நானோ
சூரியனே முளைக்காத
கிழக்கு; அய்யா!

விலகிவிட்ட ஒளிதிருப்பி
என் முகத்தில்
ஊனக்கண் ஊற்றுக்கண்
திறந்து வைப்பீர்!

சலனமிலாச் சவப்பார்வை;
சூனி யத்தில்
சஞ்சரிக்கும் விழிப்பாவை
உயிர்க்கச் செய்வீர்!

முதற்பதிப்பு பழுதானால்
என்ன? நீங்கள்
மனம் வைத்தால் மறுபதிப்பு
செய்ய லாமே!

புதுப்பிறவி நான்பெறநீர்
கண்கொ டுத்தால்
பூசிப்பேன் இமைகூப்பி
வணக்கம் செய்வேன்!

ஒளிவிதைகள் உங்களது
விழிகள்; அவற்றை
ஊன்றுங்கள் என்முகத்தில்
முளைக்கும் வெளிச்சம்!

விண்கொடையால் மண்ணுக்கு
மழைகி டைக்கும்
விழிக்கொடையால் எங்களுக்கு
ஒளிபி றக்கும்!

முடிவுரையில் உங்கள்இமை
மூடும் போது
முகவுரையை என்இமையில்
எழுத லாமே!

கண்கொடையால் காலங்கள்
இறந்தும் வாழ்வீர்:
காட்சி தரும் 'கண்காட்சி'
திறந்து வைப்பீர்!

3

## விழிகளுக்கு மரணமில்லை

மண்தானம் பொன்தானம்
அன்ன தானம்
மற்றெந்த தானங்கள்
எதற்கும் மேலாய்

'கண்தானம்' மிகஉயர்ந்த
தானம்; முன்பு
கண்ணப்பன் கடவுளுக்கே
தந்த தானம்!

இறப்புக்குப் பின்னாலே
உங்க ளோடு
இருவிழியும் எரிப்பதனால்
பயன்தான் என்ன?

உறுப்புகளில் மிகச்சிறந்த
கண்ணி ரண்டை
ஊனத்தைக் களைவதற்கு
தானம் செய்வீர்!

முகத்திற்கு முகவரியே
கண்கள்; உங்கள்
முகவரியை மீள்பார்வை
செய்ய லாமே!

புதைப்பதனால் மண்தின்னப்
போகும் கண்ணைப்
புதுப்பிறவி பிறர்பெறவே
உதவ லாமே!

விதைப்புஇது! வீணல்ல;
விரயம் அல்ல;
விழிகளுக்கு மரணமில்லை
எந்த நாளும்!

## படிக்கட்டும்
## 'படி' கேட்கும்!

கல்வி யென்கின்ற
கலங்கரை விளக்கின்று
செல்வம் திரட்டுகின்ற
சிவப்புவிளக் கானதுஏன்?

கொள்ளை மலிவாகக்
குடிசைக்கு வந்தகல்வி
'கொள்ளை' - மலிவானதால்
கோபுரத்தில் குந்தியது!

பாமரப் படிப்பென்றும்
பணக்காரப் படிப்பென்றும்
நாமகள் இரட்டை
நாக்குகளால் பேசுகிறாள்!

வெள்ளைத் தாமரையில்
வீற்றிருந்த கலைவாணி
வெள்ளித் தாமரையில்
கொலுவீற் றிருக்கின்றாள்!

நாணமின்றி பெற்றோரின்
நரம்புகளைச் சுரண்டிசிலர்
வீணை நரம்புகளாய்
வித்தகங்கள் புரிகின்றார்!

விலைபோட்டு வாங்கிடவா
முடியும் இக் கல்வினை
வினவியது தமிழேந்தும்
பாவேந்தர் நெஞ்சம்!

விலைபோட்டு வாங்கத்தான்
முடியும்!இக் கல்வியெனும்
மலையேறப் படிக்கட்டுப்
படிக்கட்டு லஞ்சம்!

படிக்கட்டும் பிள்ளையெனில்
பள்ளிக் கல்லூரிகளின்
படிக்கட்டும் 'படி' கட்டும்
படிகேட்கும் காலம்!

கொள்ளை மலிவாகக்
குடிசைக்கு வந்தகல்வி
'கொள்ளை' மலிவானதால்
கோபுரத்தில் குந்தியது!

## அழகின் உற்சவம்

அழகைக் கண்டு
மகிழ்பவன் நான்;
அதனைக் கவியில்
புகழ்பவன் நான்!

வானம்பூமி எங்கிலும்
இயற்கை
வரைந்த வண்ணக் கோலங்கள்!
காணும் இடங்கள்
காட்சி அழகுகள்
கண்கள் செய்த யாகங்கள்!



அந்திச் செவ்வான்
சூரிய வட்டம்
அடடா! அழகின் உச்சம்;
சிந்தும் நிலவொளி
சித்திரப் பந்தல்
அந்தி அழகின் மிச்சம்!

●

வான வில்லை
உடுத்தும் போது
வானத்திற் கது அழகுதான்;

வெண் மேகத்தை
உடுக்கும் போதும்
விண்ணுக் கதுவோர் அழகுதான்!

●

வண்ணத் தாமரை
பூத்துக் குலுங்கும்
தண்ணீர்க் குளமும் அழகுதான்;

தண்ணீர் மட்டும்
நிரம்பிய குளத்துத்
தன்னடக் கமும் அழகுதான்!

விண்முகத் திற்கு
வெளிச்சப் பொட்டு
வெள்ளை நிலவு அழகுதான்;

வெண்ணி லவுக்கு
விடுமுறை நாளில்
வெட்ட வெளியும் அழகுதான்!

பூக்கூட் டத்தின்
புதுமு கங்களில்
புன்னகையும் ஓர் அழகுதான்;

பூக்க மறந்த
மரகதப் பச்சைப்
புல்வெளி கூட அழகுதான்!

வண்ணக் கலவையில்
ரங் கோலி
கண்ணைக் கவரும் அழகுதான்;

வளைந்த வெள்ளைக்
கோட்டுப் புள்ளியில்
வாசல் கோலமும் அழகுதான்!

பழகிப் பார்க்கப்
பார்க்கும் எதிலும்
பளிச்சிடும் அழகின் உற்சவம்;

அழகின் உற்சவம்
இல்லா விட்டால்
உலகம் என்பது வெறும்சவம்!

## அழகு உன் விழியில்!

அழகைப் போற்றி
அருமை நண்பர்
ஆலவட்டம் சுற்றுகிறார்!

அழகு ஒன்றே
உலகு என்றிவர்
அந்தப் போதையில் சுழலுகிறார்!
●

காம்பில் சிறிய
கோணல் என்றால் - அது
கனியின் சுவையைக் குறைக்குமா?

வேர்கள் வளைந்து
இருந்தால் என்ன - அவை
நீரை உறிஞ்ச மறுக்குமா?

கோணல் கிளையெனில்
தேனீக் கூட்டம்
கூடுகட்டாமல் ஒதுக்குமா?

கண்ணில் அழகு
இருந்தால் பூவின்
காம்பிலும் அழகைப் பார்க்கலாம்!
●

முத்திரை ஓவியம்
மோன லிசாவின்
சித்திரம் அழகின் பெட்டகம்!

பூமுகம் அல்ல;
மோன லிசாவின்
புன்னகை தானே பேரழகு!



மங்கை கறுப்பு
லைலா என்றால்
மஜ்னு கண்ணால் பாருங்கள்!

தங்க நிறம்தான்
தகுதி என்றால் - நம்
தங்கை நிறமும் பாருங்கள்!

கண்ணில் உண்மைக்
காதல் இருந்தால்
காதலி என்பவள் தேவதை!



அழகில்லை எனப்
பெண்ணை மறுப்பது
ஆண்மக னுக்கு அழகில்லை;

அழகுக் குறைவே
தகுதிக் குறைவெனில்
ஆறறி வுக்குப் பொருளில்லை!

# வெயிலுக்குத் தீக்குடையா?

ஊர்முழுக்கச் சாலைகளை
ஊர்திகளுக் காகஅல்ல
ஊர்வலங்கள் போகத்தான்
உபயோகப் படுத்துகிறோம்!

மறியல்கள் போராட்டம்
மாநாடு ஊர்வலங்கள்
சிறுஉயிர்க்கும் தீங்கின்றி
செய்வதற்குப் பழகவில்லை!

சாலைகளில் விபத்துக்கள்
சம்பவிக்கும் இந்நாளில்
சாலைக்கே விபத்துவரச்
சாதித்தாய் மனிதாநீ!

சாலை மறியல்களால்
சங்கடம் அமைச்சருக்கா?
வேலை முடங்குவதால்
வேதனைகள் யாருக்கு?

பேருந்தா உன்எதிரி?
பயணிகளா உன்பகைவர்?
வேரூன்றும் மரங்கள்
விரோதிகளா உனக்கு?

மரம்வைத்தார் உன்முன்னோர்;
மதில்வைத்தார் உன்பாட்டன்;
உரம்வைத்தான் உன்தந்தை
உருக்குலைக்கத் தானா,நீ?

கைநகத்தில் அழுக்கெடுக்கக்
கடப்பாரை தேடுவதா?
வெயிலுக்குத் தீக்குடையா,
விடைகாண வன்முறையா?

பொதுச்சொத்தை அழிப்பதுவா
புரட்சிக்கு அடையாளம்?
பொதுமக்கள் புலம்பல்களா
புரட்சிக்குச் சங்கீதம்?

சிந்திப்பாய் ஒருநொடி-நீ
சீரழிக்கும் பலகோடி
மந்திரிக்கா சொந்தம்?
மனிதா உன் சொத்துக்கள்!

வெறித்தனத்தின் விளைவுகளை
வெற்றியெனக் கொண்டுவிட்டால்
சரித்திரத்தில் வன்முறைதான்
சாதனைஎன் றாகிவிடும்!

வீதிகளை உன்னுடைய
வேட்டைக்கா டாக்காதே!
பாதைகளைப் பொதுமக்கள்
பலிமேடை யாக்காதே!

## முடிவடையாத இதிகாசங்கள்

இந்திய நாட்டின்
இன்றையக் குடிமகன்
இதிகா சங்களைத் தொடர்கின்றான்!

சந்ததி போற்றும்
இலக்கியங்களிலே
சாதகப் பட்டதைப் படைக்கின்றான்!

உவமானத் துடன்
இராமாயணக் கதை
உருக்கமாகக் கேட்ட பின்பு

அவனவன் வீட்டுத்
தோட்டங்களிலே
அசோக வனங்கள் அமைக்கின்றான்!

பாஞ்சாலிக்கு
ஆடைவழங்கிய
பரந்தா மன்பேர் பாடிவிட்டு

நோஞ்சான் கூட
துச்சா தனனாய்
நூறு பாஞ்சாலி துகிலு ரிவான்!

உபரிச் சதையைக்
குறைப்பவ னெல்லாம்
'சிபி'யெனத் தன்னைச் சொல்கின்றான்!

காவல் கைதியின்
கற்பைக் கெடுத்தவன்
கோவலன் என்று கூறுகின்றான்!

தீயில் விரலைச்
சுட்டுக் கொண்டவன்
தியாகி பட்டம் தேடுகின்றான்!

உள்ளங் கைகளில்
ஆயுதம் மறைப்பவன்
வள்ளுவன் தந்தது என்கின் றான்!

துஷ்யந்த னாகத்
துடிக்கும் சிலரால்
சாகுந் தலைகளின் கதைதொடரும் - அட
சாகும் தலைகளின் கதைதொடரும்!

முடிவடை யாத
இதிகா சங்கள்;
முற்றுப் பெறாத இலக்கி யங்கள்!

இந்திய நாட்டின்
இன்றைய குடிமகன்
இதிகா சங்களைத் தொடர்கின்றான்!

## மரணங்கள் மலிவு விலை

(1984 டிசம்பர் 3)

பூபாளத்தோடு
பொழுது விடிந்தது
போபாலில் பலபேர் வாழ்வு முடிந்தது!

இருட்டில் பொது ஜனங்கள்
வெளிச்சத்தில் வெறும் பிணங்கள்!

அக்கரைச் சீமை வைத்த
ஆலை 'யூனியன் கார்பைடு'
அக்கறை இன்மையினால்
அது பெரிய 'கறை' ஆச்சு!

பூச்சிக் கொல்லிக்குப்
பொதுமக்கள் பலியானார்!

பூக்காடாய் இருந்த
போபால் நகரமன்று
சாக்காடாய் மாறிய
சம்பவத்தை என்னசொல்ல?

வாழும் மக்களெல்லாம்
'வாயில்லாப் பூச்சி' என்று
பாழும் பூச்சிக் கொல்லி
படுகொலை நடத்தியது!

வாசல்கள் தோறும்
வாழ்விழந்த உடலங்கள்;
ஈசல்கள் போலெங்கும்
இறைந்த சடலங்கள்!

பேசும் குழந்தைகளைப்
பிள்ளைப் பூச்சியென்று
நாசம் புரியவந்த
நச்சுவாயு விழுங்கியது!

மூச்சளிக்கும் காற்றே
மூச்சடக்கும் விஷமாக
பேச்சடங்கிப் பெருநகரம்
பிரேத நகரமாச்சு!

வயல்களில் தெளிக்க
வழங்குகிற களைக்கொல்லி
பயிர்களை அழிக்கும்
பாதகம் நடந்ததே!

தொண்ணூறு குழிவெட்டி
தொண்ணூறு குழந்தைஇட்டார்;
மண்ணீரம் காயுமுன்னே
மறுபடியும் குழியெடுத்தார்!

விரிந்து கிடந்திட்ட
'விக்ரம் காட்' மயானத்தில்
எரிந்த பிணங்கள்பல;
இடமின்றிக் கிடந்தபல!

நிச்சயம் இறந்தவர்க்கு
நிவாரண நிதிகிடைக்கும்!
அச்சப்படுத்தும் ஆலைபற்றி
ஆருக்கு நீதிகிடைக்கும்?

மரணங்க ளுக்குஇங்கு
மலிவுவிலை கிடைக்கும்:

பெரிய பிணத்திற்கு
உரிய தொகையுண்டு;
சிறிய பிணமா?அதற்குச்
சில்லரைகள் மிகவுண்டு!

ஈட்டுப் பணத்தில்நம்
இழப்புகளைச் சரிசெய்வோம்
மீட்டும் விபத்துவரும்
மீண்டும் நிவாரணம்தான்!

4

## நச்சு விதைகள்

ஆதியிலே வந்ததல்ல
சாதிப் பிரிவுகள் - இந்த
அசைநிலைகள் நடுவில்வந்த
சூதுப் பிரிவுகள்!

பாதியிலே தீட்டிவைத்த
நால் வருணங்கள் - பொதுப்
பாதையிலே தூவிவிட்ட
நச்சு விதைகள்!

கருவறையில் வர்ணபேதம்
போகவில்லையே - இங்கு
கல்லறைகள் கூட ஒன்று
சேர வில்லையே!

ஆதிமகள் ஔவையின்
ஈவுகள் தானே - அந்த
நீதியினை மறந்தால்நாம்
தீவுகள் தானே!

# 'கனிச்சீர்' ஆவதெந்நாள்?

தங்கைக் கொடிமரத்தில்
தாலிக் கொடியேற
கங்கணம் வரதட்சணைக்
கயிறும் தரவேண்டுமாம்!

'தங்க' மயில் வாகனனே
தணிகை மலைக்குமரா - என்
தங்கை மயில்களுக்கு
'வாகனம்' தந்தால்தான்

மாப்பிள்ளைக் குமரன்கள்
மாலையிட வருகின்றார்:
வாய்ப்பில்லை என்றாலோ
வர(ம்) மறுத்துச் செல்கின்றார்!

குன்றனைய தங்கத்தில்
குமராஉன் தேரோடும்;
குன்றிமணித் தங்கமின்றிக்
குமரித்தேர் நகரவில்லை!

பூச்சீர் இவர்களெல்லாம்
பொன்சீர் இல்லாமல்
காய்ச்சீரா யிருக்கின்றார்
கனிச்சீரா யாவதெந்நாள்?

# இன்னும் கற்காலம்

தோழி என்-

மாமியார் ஆட்டுக்கல் - அவள்
மகனோ குழவிக்கல்!
மாமனார் கருங்கல் - பாவம்
மருமகள் கூழாங்கல்!

நாத்தனார் குத்துக்கல் - அவள்
நகராத காணிக்கல்!
போடு 'வைரக்கல்' என - தலையில்
போட்டார் பாறாங்கல்!

தந்தைக்கோ பிக்கல் - பாவம்
தாளாத பிடுங்கல்!

தலையெடுத்தது சிக்கல்
அதனால் நான்
தாய்வீடு தங்கல்!

-'கல்'யாணி

## வாய்ப்பந்தல்

எத்தனையோ சீர்திருத்தத்
தொண்ட ரெல்லாம்
ஏழ்மையெனும் மணற்குன்றில்
சரிந்து வீழ்வார்!

எத்தனையோ கலைவளர்க்கும்
அறிஞ ரெல்லாம்
இல்லாமைப் புதைகுழியில்
புதைந்து போவார்!

எத்தனையோ வீரர்களும்
நாட்டின் மாண்பை
எழுதுகிற கவிஞர்களும்
சருகாய் ஆவார்!

எத்தனையோ பிறவிகளும்
வறுமைத் தீயில்
இளமையிலே மொட்டினிலே
கருகிப் போகும்!

ஏழ்மைக்குச் சாவுமணி
அடிப்போ மென்றும்
இல்லாமை இல்லாமல்
உழைப்போ மென்றும்

தாழ்வுற்றோர் கரம் தூக்கி
விடுவோ மென்றும்
தருமத்தில் சமரசமாய்
வாழ்வோ மென்றும்

ஏழைகளின் கண்ணீரைத்
துடைப்போ மென்றும்
எழுதுகிறோம் வாய்ப்பந்தல்
போடு கின்றோம்!

ஏழைக்குத் தோள்தந்து
காக்கும் தொண்டில்
இதயத்தை முன்வைக்கத்
தயங்கு கின்றோம்!

# அழுக்குப்படாத ஆறடி நிலம்!

அன்னை பாரதத்தில்
அழுக்குப் படாதநிலம்
கண்ணில் படுகிறதா?
கண்டறியச் சென்றேன் நான்!



இமயம் முதல் குமரிவரை
எத்தனை பரப்பளவு?
இமைகளை மூடாமல்
இரவுபகல் சுற்றி வந்தேன்!



ஆலைகள் நீதிமன்றம்
அரசாங்கக் கட்டடங்கள்
சாலைகள் சட்டமன்றம்
சலிப்பின்றிப் பார்வையிட்டேன்!



கடைவீதி வங்கிகள்
கல்வி நிறுவனங்கள்
குடியிருப்பு வீடுகள்
குடிசைகள் சுற்றினேன்!

அழுக்குப் படாதநிலம்
அங்குலம் தேறவில்லை!

பாலைகள் காடுகள்
பண்ணை வயல்வெளிகள்
சோலைகள் தோப்புகள்
சோர்வின்றிச் சுழன்றுவந்தேன்

ஆலயங்கள் மடங்கள்
அறநிலையம் மணக்கூடம்
காலிமனை அத்தனையும்
கண்ணோட்டம் விட்டேன்நான்

அழுக்குப் படாதநிலம்
அங்குலமும் தேறவில்லை!

முழுக்கச் சுற்றிவந்து
மூச்சுத் திணறியது!
அழுக்குப் படாத நிலம்
அகப்பட்டு விட்டதா?

அகப்பட்டு விட்டது!
அதிசயமாய் இந்தியாவில்
அகப்பட்டே விட்டது!
அதோ தெரிகிறதே!

"எவ்விடத்தில்? எங்கே?
எத்தனை சதுரம்?"

ஒவ்வொரு ஊர்தோறும்
ஒதுக்குப் புறமாக

'அழுக்குப் படாத
ஆறடிப் பூமி!'

## தேன் சுவைக்காத தேனீ

உழைப்பாளியே,
முடவன் உனது முதலாளிக்காக
குடம்தேன் எடுத்துத்
தருகிற தோழனே!

உனது புறங்கைத் தேனையும்
உன் முதலாளியே
நக்கித் துடைக்கிறான்!

வெறுங் கையோடுனை
அனுப்புவான் - எதற்கு?
மறுபடி நீபோய்த் தேனெடுக்க!

தொழிலாளியே,
தேனீக் கொடுக்கின்
தழும்புகள் உனக்கு;
தேனடை கூட
எசமான் நாய்க்கே!

## யாரறிவார்
## அவர் பிறக்கும் தேதி?

பாரத தேவி
பாவம் அப்பாவி;
பதவி களுக்கு வேலைக்காரி!

சுதந்தர தேவி
தந்திர சாலி;
சொத்துள் ளவனின் வீட்டுக்காரி!

சிம்மா சனமோ
பாக்கிய சாலி
சேர்க்கைக் கேற்ற காரியவாதி!

மந்திரி சாதி
மந்திர வாதி
மலையை விழுங்கும் மாயாவாதி!

காவல் மிகுதியும்
தைரியசாலி
கயமைத் தனங்களின்
பெருங்கூட்டாளி.

அரசியல் வாதி
சந்தர்ப்ப வாதி;
பதவி ஆசை அகலாவியாதி!

பத்திரிகை எனும்
மேளச் சாதி;
பாதிக்கு மேலே தாளச்சாதி!

சாதி என்னும்
தீர்க்க சாலி;
சாகா வரம்பெறும் பயங்கரவாதி!

சமயம் என்னும்
கற்பனா வாதி;
சாமியின் பெயரால் தீவிரவாதி!

ஊழல் ஒன்றே
தேசிய வாதி;
உபகண்டத்தின் இலட்சியவாதி!

தருமம் சத்தியம்
அகிம்சா வாதி;
தலைமறை வான சாமர்த்தியசாலி!

பொதுசனம் மிகவும்
பொறுமை சாலி;
பொய்கள் சூதின் தோழமைவாதி!

யார்தான் இங்கே
உண்மை வாதி?
யாரறி வாரவர் பிறக்கும்தேதி?

## பைசா கோபுரங்கள்

அரசியல் வாதிகள்
அரசியல் வியாதிகள்!
சரிசெய்ய முடியாத
சந்தர்ப்ப வாதிகள்!

காவல்களில் இவரைக்
கட்டிவைத் தாலும்
தாவல்களை எவராலும்
தடுக்க முடியாது!

அரசியல் வாதிசிலரின்
அலங்கார மாளிகைகள்
பரிசிலாய் நாம்தந்த
'பைசா' கோபுரங்கள்!

தக்கவழி காட்டும்
தலைவர்களை விடவும்
தாக்கவழி காட்டும்
தலைவர்களே பெருகுகிறார்!

## ஈரம்
## வற்றிப்போனது ஏன்?

எங்கள் தாயகம்
பாரத தேசம்;
ஏழையைத் திரும்பிப்
பாராத தேசம்!

தருமச் சக்கரத்தின்
தடம் புரண்டு போனதனால்
வறுமைச் சக்கரத்தில்
வாழ்க்கைத் தேர் உருள்கிறது!

அன்னை மணித்தேரின்
அசோகச் சக்கரத்தில்
கன்னக் கோல் தானா
கடையாணி ஆனது?

எங்கோ நடந்த சூதுகளால்
இவர்கள் பெற்றது தெருவாசம்;
இந்தத் தருமப் புத்திரர்க்கு
இந்திய நாடே வனவாசம்!

துப்புர வாக உடைமையெலாம்
துடைக்கப் பட்ட இவர்களிடம்
துடைக்கா மல்இருப் பதொன்று
'துயரம்'; அதனைத் துடைப்பதென்று?

எங்கள் தேசம்
பாரத தேசம்
ஏழையைத் திரும்பிப்
பாராத தேசம்!

பலியா டுகளே ஏராளம்
பாரத நாட்டில் எதனாலே?
புலியைத் தேசிய விலங்காகப்
புகுத்தி னோமே அதனாலா?

ஏந்தல்கள் வாழ்ந்த நாட்டில்
எதற்கெடுத் தாலும் இன்று
ஏந்தல்கள் கையேந் தல்கள்!
ஏனிந்த பலவீனங்கள்?

சொந்தப் பிள்ளைகள் பாதிப்பேர்
சுற்றிப் பாலுக் கழும்போது
இந்தியத் தாயின் மார்பகங்கள்
ஈரம்வற்றிப் போனது ஏன்?

## சுவரொட்டிகள்

மனசாட்சியை விற்கும்
மக்களின் தலைவர்கள்
கனவான் அச்சகத்தின்
கையடக்கப் பதிப்புகள்!

தேர்களை உடைத்துத்
தீக்குச்சி செய்பவர்கள்;
வேர்களைப் பறித்து
விறகாக் குபவர்கள்!

பாரத மாளிகையைப்
பழுதுபார்க்க இயலாமல்
சுவர்களின் விரிசல்களைச்
சுவரொட்டியால் மறைப்பவர்கள்!

## அச்சம் தவிர்

மழை வெள்ளம்
வரும் வரையில்
மண்குதிர்கள் தம்மை
மலையென்று
நினைத்திருக்கும்!

கதிர்களை அடித்துக்
கைது செய்து
பதர்கள் கூடிப்
பஞ்சாயத்து பேசும்!

குதிர்களாய் மக்கள்
குந்தியிருக்கும் வரை
உதிரிகளுக்குத் தான்
உச்சகட்டம்! இந்த

ஓடுகாலிகள்
கருங்காலிகள்;
இவர்களுக்குத் தேவை
நாற்காலிகள்!

அதனால்,
அச்சம் தவிர்!

தும்மலுக்குப் பிறர்
சம்மதம் கேட்டும்
விக்கலுக்கு அவரிடம்
விண்ணப்பம் போட்டும்

விம்மலே வாழ்க்கையென
வெம்பிக் கிடப்பவனே

அச்சம் தவிர் -
ஆண்மை தவறேல்!- இது
துச்சம் -தூ வெனத்
துணிந்து நில்!

உச்சம் நீதான் - புகழின்
மிச்சம் நீதான்!
அதனால்-
'அச்சம் தவிர்!
ஆண்மை தவறேல்!'
ன

# பூமியை உயரமாக்கு!

இளைஞனே-

வழிவிடு; புதிய காற்றை
வரவிடு; அழுக்கு நெஞ்சைக்
கழுவிடு; பகைநட் பாக்கிக்
கைதொடு! பொதுவில் வாழப்
பழகிடு; பொய்ம்மை யாவும்
பலியிடு! அன்னை தேசம்
தொழுதிடு; அமைதி வாழ்வைத்
தொடங்கிடு; தோழா இன்றே!

தோழனே-

ஏசலை நிறுத்து; மாற்றார்
ஏற்றத்தை முன்னிறுத்து!
நேசமே முன்னெடுத்து
நெஞ்சிலே நிலை நிறுத்து!
வாசலை அகல மாக்கு;
வார்த்தையை இனிமை யாக்கு!
பூசலைப் புழுதி யாக்கு;
பூமியை உயரமாக்கு!

# காதல் செய்வீர்

பூதலத்தில் ஓடும்
புண்ணிய நதியெதுவும்
சாதி அழுக்குகளைச்
சலவை செய்வதில்லை!

காதல் நதிகள் ஒன்றாய்க்
கலக்கும் சங்கமத்தில்
சாதி வெளுக்கிறது
சமத்துவம் படைக்கிறது!

ஆதலினால்
காதல் செய்வீர்
உலகத்தீரே! - அதனாலே
சாதி போம்
பேதம் போம்,போம்!

## மந்திர விதைகள்

காரல் மார்க்ஸின்
கருத்துப் புரட்சிகள்
காகித வயலில் விதைக்கப் பட்டன!

ஓரணி திரண்ட
உழைப்பாளி களின்
உள்ளங் கைகளில் கருப்பை முளைத்தன!

புரட்சியைத் தூண்டிய
மந்திர விதைகள்
பொதுவுடைமை எனும் புதுரக விதைகள்!

வேர்கள் கீழே
இறங்கிய போது
சர்வாதிகாரப் பாறைகள் பிளந்தன!

முளைகள் மேல்வரத்
தொடங்கிய போது
முதலாளித்துவ மேடுகள் தகர்ந்தன!

பாறைகள் மேடுகள்
படுமட்ட மானதும்
பொதுவுடை மைப்பூங் காக்கள் மலர்ந்தன!

# எத்தனை 'நான்'

எனது உயரம் எட்டுச்சாண் - அட
எனக்குள் ளேதான் எத்தனை 'நான்!'

நான் நானானது எப்போது?
நானா யிருந்தது எத்தனை நாள்?

தாயின் மடிக்கு வந்தநாளிலா?
தீயின் மடியில் வெந்த நாளிலா?

இடையில் நானாய் இருந்தேனா,
எத்தனை நான்தான்; திருந்தேனா?

எந்தத்தினம் என் சொந்த தினம்?
எந்தமனம் என் நந்தவனம்?

என்னில் என்னை விலக்கி யதார்?
என்னை எனக்கு விளக்கியதார்?

எனது உயரம் எட்டுச் சாண் - அட
எனக்குள் ளேதான் எத்தனை நான்!

## அனாமதேயங்கள்

ஏழைகள்

அன்னை தேயத்தின்
அனாம தேயங்கள்!

பிறந்த நாட்டில் இவர்கள்பெயர்
பிறப்பு இறப்புப் பதிவேட்டில்!
மறந்தி டாமல் இவர்பெருமை
மதிக்கப் படுவது இரண்டுமுறை!

முதல்முறை மக்கள் கணக்கெடுப்பில்,
மறுமுறை தேர்தல் வாக்கெடுப்பில்;
அதன்பின் இவர்நிலை புறக்கணிப்பில்,
ஆயுள் வரைக்கும் இருட்டடிப்பில்!

சொந்த நாட்டில் அகதிகளாய்
சுதந்திர நாட்டில் அடிமைகளாய்
தந்தை நாடிது பலபேர்க்கு
தருமச் சத்திரம் ஆனதிது!

அன்னை தேயத்தின்
அனாம தேயங்கள்

ஏழைகள்!

## ஈர வயிறுகள்

எழுக இளைஞனே,
இனிய தமிழனே!

புதிய விடியலில்
பூமி சுழலுமே;
உதய வேளையில்
உயிர்கள் மகிழுமே!

மலர்க மலர்கஉன்
மனித உறவுகள்;
உலகின் கூரையில்
உனது சிறகுகள்!

வேலி யில்லைஉன்
வியர்வை ஊற்றுதான்
பாலை வனங்களில்
பாயும் நதிகளே!

விரைக விரைகஉன்
விரல்கள் உழுபடை;
தரிசு நிலங்களில்
தங்க அறுவடை!

பங்கு தரட்டுமே
பாதி முதுகுகள்;
எங்கு நோக்கினும்
ஈர வயிறுகள்!

எழுக இளைஞனே,
இனிய தமிழனே!

ஈழத் தீவிலே
ஏறும் புலிக்கொடி;
இழந்த தீவுகள்
மீளும் மறுபடி!

தூக்குக் கயிறுகள்
போகி நெருப்பினில்
தீக்குளிக்கும் நாள்
தித்திக் கின்றநாள்!

கட்டை விரல்நகம்
அளவில் கணிப்பொறி
திட்ட மிட்டுச்செய்
தெற்குத் தமிழனே!

பஞ்சம் நீக்கிட
பசியைப் போக்கிட
கஞ்சி காய்ச்சுமே
கணினி எந்திரம்!

ஆயு தங்களை
அழிக்கும் ஆயுதம்
நீயறிந் தெடு
நிலைக்கும் மனிதமே!

இலகும் அறிவியல்
இணைய வலையினில்
உலகம் முற்றுமே
உனது சுற்றமே!

எட்டுத் திசைகளும்
இணைந்து நட்புடன்
பொட்டல் வெளியிலும்
பொங்கல் வைக்குமே!

புதிய விடியலில்
பூமி சுழலுமே
உதய வேளையில்
உயிர்கள் மகிழுமே!

எழுக இளைஞனே,
இனிய தமிழனே!

# நீ ஒரு நெருப்புப் பிழம்பு!

பின்னுக்குப் போகும் நாட்டின்
பிழைகளைத் திருத்தம் செய்ய
என்னாலா முடியும் என்று
ஏனின்னும் தயங்கு கின்றாய்?

தன்னாலே முடியும் என்ற
தத்துவம் பேச வேண்டாம்!
உன்னால்தான் முடியும் தோழா,
உரிமைக்குக் குரல் எழுப்பு!

முன்னாலே வந்து நீநில்
முற்போக்கு முழக்கத் தைச்சொல்
பின்னாலே இளைஞர் கூட்டம்
பேரணி திரளும் வா,வா!

நீ ஒரு நெருப்புப் பிழம்பு;
நெஞ்சை நிமிர்த்திக் கிளம்பு!

## வாய்மைக்கு வாய்க்கரிசி!

வெள்ளிக் காசுகளால்
விலாசம் மாறுகிற
புள்ளிகளே இன்றைய
பொய்யான தலைவர்சிலர்!

தூய்மையை விலக்கிவைக்கத்
துணிந்த அரிச்சந்திரர்கள்!
வாய்மையைக் கொன்று
வாய்க்கரிசி போடுகிறார்!

சந்திர மதிகளோ
சலனமே இல்லாமல்
ஜனநா யகத்தின்
சவஅடக்கம் நடத்துகிறார்!

சத்தியத் திற்கிங்கு
சமாதி கட்டிவிட்டு
'சத்யமேவ ஜெயதே'
சாட்சி எழுதுகிறார்!

ஜனநா யகத்தின்
சவஅடக்கம் முடிந்தபின்பு
மனதார நாடெல்லாம்
மௌனஅஞ்சலி செய்கிறார்!

சுதந்திர நாடு இன்று
சுடுகாடாய் மாறியதால்
மாபாரத கண்டம் -
மயான காண்டமிது!

# பூமி முட்டை பொரித்த குஞ்சுகள்

தேம்ஸ் நதியைத்
தீண்டிய காற்று
காங்கோ நதியில்
தீட்டுப் படுமா?

கறுப்பு வெளுப்பில்
கண்ணா மூச்சா?
கறுப்பு வெறுப்பா?
கவனி உன்மேனி!

வெள்ளைத் தோலில் - பார்
கறுப்பு மச்சம்;
வெட்டி எறியேன்
ஏனடா அச்சம்!

வெளித்தோல் நிறங்களில்
வேறு பட்டாலும்
வெள்ளை எலும்பே
எல்லா உடம்பிலும்!

வெள்ளை உன்னுடல்;
வெள்ளையா விழும் நிழல்?
விலக்கிவைப் பாயா
உனது நிழலை? இயலுமா?

நீங்காத உன்னிழலும்
கறுப்புத் தானே?
நிழலைச் சலவை
செய்ய முடியுமா?

புவியில் வாழும்
மனிதப் பிஞ்சுகள்
பூமி முட்டை
பொரித்த குஞ்சுகள்!

பூகோ ளத்தின்
எல்லைக் கோடுகள்
பூக்கோ லத்தின்
வெள்ளைக் கோடுகள்!

# கண்ணிமையில் தூது

கண்ணிமையில் தூதுவிட்டு
கைவிரல்கள் மேனிதொட்டு
காதலியோ அசைந்துவரும்
பூரதம் - இவள்
மின்னலிடை ஆடிவர
மீன்விழிகள் ஓடிவர
மின்மினியாய்க் காட்டுகிற
நாடகம்!

ஆசைமனப் பூங்குயில்என்
ஆருயிரில் கலந்தஎழில்
ஆவியிலே கட்டிவைத்தேன்
ஆலயம் - அட
பூசைவழி பாடுகளில்
புத்திசெல்ல வில்லையந்தப்
பூமடியில் தானெந்தன்
ஜீவியம்!

முத்தமிட்டு முத்தமிட்டு
முக்கனியைத் தோற்கடித்து
மோகவெறி யூட்டுகிற
காவியம்!
சித்திரைக்கும் பங்குனிக்கும்
சிந்தையிலே பங்கு வைத்து
சித்தம்தடு மாறவைக்கும்
ஓவியம்!

தேவியிவள் பூமடியைத்
தாய்மடியாய் நான்நினைத்து
தேடுகிறேன் தேடுகிறேன்
நிம்மதி!
தூயமன அன்புதனை
தேவியவள் வழங்கும்போது
தூரமில்லை தூரமில்லை
சந்நிதி!

# பாதி நினைவு
## பாதி கனவு

காலம் கரைத்த நினைவுகளை - பல
காவியம் வளர்த்த கனவுகளை
கோலம் நிறைந்த மதிமுகத்தில் - மது
குழையும் மலரின் குழலிடையில்

சாலச் சிறக்கக் காட்டுவதும் - மொழிச்
சாற்றில் தேன்பா லூட்டுவதும்
நீலம் சுரக்கும் விழிகளிலே - உன்
நெஞ்சம் சுரக்கும் குறிப்பன்றோ?

பாதிக் கண்கள் நினைவளக்கும் - மறு
பாதிக் கண்கள் கனவளக்கும்!
மோதிச் சாடும் குழல்மறைவில் - சிறு
'முறுவல் தின்' னென முத்தளித்தாய்!

பாதி விழிகள் சிரித்திருக்கும்
பாதி நாணிப் புதைந்திருக்கும்
தூதில் முடிக்கத் துடித்திருக்கும் - இதழ்
தோளின் வண்ணம் கடந்திருக்கும்!

கோடிப் பூவின் மணமடக்கி - ஒரு
கோதைப் பூவாய்ப் பிறந் தவளே!

## ஊடல்

அத்தான்!

விண்மீது மின்னல் வெட்டி
விரிசல்கள் வந்த துண்டா
மண்மீது கலப்பை கீறி
மண்மேனி புண்ணா யிற்றா?

கண்மீது இமைகள் உரசிக்
காயங்கள் பட்ட துண்டா
தண்ணீரில் துடுப்பு மோதித்
தழும்புகள் வந்த துண்டா?

கண்ணீரின் வெப்பம் பட்டா
கன்னத்தில் கொப்பு ளங்கள்?
என்மீது உங்கள் கோபம்
இலைமீது காற்று போல!

6

# மீசைகள்-
# மின் நிலையங்கள்!

தமிழின் மேன்மையும்
தமிழன் ஆண்மையும்
இமயம் வரைக்கும்
எதிரொலிப் பதற்கு

தமிழா இருபதாம்
நூற்றாண் டில்தான்
தமிழ்க் கவிதைக்கு
மீசை முளைத்தது!

எட்டயபுரத்து முறுக்கு மீசையும்
வெட்டியபுதுவை நறுக்கு மீசையும்
மீசைமுளைத்த எதுகை மோனைகள்;
மீட்சிக்குதவிய கவிதைச் சேனைகள்!

மீசை நமக்கு மிதவெப்ப மண்டலம்;
மேதைகள் இவர்க்கோ மின்சார நிலையம்!
பாரதி மீசை அனல்மின் நிலையம்;
பாவேந்தர் மீசை அணுமின் நிலையம்!

# எட்டயபுரத்து வீதிகளில்...

பாரதியே - எங்கள்
கவிதைப் பாட்டனே! - உன்

தலைப்பாகை காட்டுகிற வடிவம் - அது
தமிழன்னை சூட்டிவிட்ட மகுடம்!

கலைப்பாதை நீ வகுத்த கவிதை - உன்
காலடியில் எங்களது தொழுகை!

பாரதியே-

எட்டய புரத்து வீதிகளில் - நீ
எடுத்து அடிகள் வைத்தவுடன்
எட்டி யிருந்த இமயத்தில்
இன்னொரு சிகரம் முளைத்தது!

தாயின் மடியில் தவழாமல்
தரையின் மடியில் தவழ்ந்ததனால்
தாயின் பாசம் என்பதனைத்
தாய்மண் மீது பற்றென்றாய்!

தாயிடம் மழலை பழகாமல்
தானே பேசிப் பழகியதால்
வாயில் வந்த முதல்வார்த்தை
'வந்தே மாதரம்' என்பதுதான்!

கேள்விக் குறியாய் நீயிங்கே
கிளர்ந் தெழுந்த பின்னால்தான்
தோல்விக் குறியாய் வெள்ளையரின்
தோட்டாக் குறியே மாறியது!

கையின் விலங்கைத் தகர்ப்பதற்கு
கவிதைச் சுத்தியல் தந்தவனே!
பையக் கால்விலங் கொடிக்கும்முன்
பயணம் முடித்துக் கொண்டாயே!

பாரதியே-

அக்கிர காரத்தின்
அந்தநாள் பெரியார்நீ!
வக்கிரப் பார்வைகளை
வழிப்படுத்தி வைத்தவன்நீ!

அன்னியன் என்னாமல்
ஆதித் திராவிடனுக்கு
உன்நயனத் தாலேயே
உபநயனம் நடத்தியவன்!

புதுவிதி கண்ட உன்னைப்
பூணூலார் விலக்கி வைத்தார்
விதிவிலக் கானாய்; சாதி
விதிகளை விலக்கி வைத்தாய்!

இழிபிறப்பாளர் என்பார்
இருபிறப் பாளர் என்பார்
வழிபிறப் பொன்று என்றால்
வகைவகைப் பிரிவு ஏது?

'பிறவியால் எவனு மிங்கே
பிராமணன் ஆவதில்லை;
அறிவுடன் ஒழுக்கம் சேர்ந்தால்
அந்தணன் ஆவான்!' என்றாய்!

வெற்று மையால் சிலர் - இங்கு
வேற்று மையை விளைக்கையில்
ஒற்று மைக்கு விதைத் தூவி
ஒருமை யினை வளர்த்தவன் நீ!

## களம் கண்ட மறவன்

புதுச்சேரித் தோட்டத்துக்
குயில் -சமூகப்
பொய்மைகளைச் சாடவந்த
புயல்! - மொழிக்குப்
புதுவெள்ளம் தந்தநதிப்
பெருக்கு - சாதிப்
புன்மைகளைப் பொசுக்க வந்த
நெருப்பு! - நாட்டில்
பொதுவுடமை முரசடித்த
புலவன் - வீதிப்
புரட்சிக்குக் களம் கண்ட
மறவன்!

பாவேந்தே!

விதிபற்றிக் கொண்டிருந்த
பழமை வாதம்
வெறுந்திண்ணை வேதாந்தம்
என்று ரைத்தாய்!

மதம்பற்றிக் கொண்டிருந்த
குறிகள் நீக்கி
மதநெற்றி வெறும்நெற்றி
ஆக்கச் சொன்னாய்!

விதியற்று வெளுத்திருந்த
விதவைப் பெண்ணின்
வெறும்நெற்றி யில்நீயே
பொட்டு வைத்தாய்!

வியர்வையினைச் சிந்துபவன்
'இருண்ட வீடு'
வெளிச்சமுறக் 'குடும்ப விளக்'
கேற்றி வைத்தாய்!

உயர்புலவன் சுயமரியா
தைக்கா ரன்நீ!
உன்கைகளில் 'பாண்டியன்
பரிசு' பெற்றான்!

அயர்வின்றி தமிழன்னை
கண்ணீர் மாற்றி
அவள் முகத்தில் நீ 'அழகின்
சிரிப்பு' சேர்த்தாய்!



முயற்சியுடன் 'தமிழியக்கம்'
வளர்ப்ப தற்கு
முகாம்போட்ட இடம்தானே
'குறிஞ்சித் திட்டு!'

சமுதாய மீட்சிக்குப்
படைந டத்திச்
சந்தங்கள் விருத்தங்கள்
அணிவ குக்கும்!

தமிழச்சியின் கற்பைச்
சூறை யாடும்
தருக்கர்களின் கொட்டத்தை
ஈழம் பார்க்கும்!

'தமிழச்சி யின் கத்தி'
அந்த மண்ணில்
தங்கச்சி தாய்மார்கள்
மானம் காக்கும்!

எம'திளைஞர் இலக்கி'யத்தைத்
தந்த மைக்கு
'எதிர்பாரா முத்தம்' இதோ
உந்தன் கைக்கு!

## எந்த நாளோ?

யுகங்கோடி தவமிருந்தாள்
அன்னை இங்கே
ஊர்பெற்ற திருவருளாய்ப்
பிறந்தார் காந்தி!
யுகங்கோடி தவமிருந்தான்
இறைவன் இங்கே
ஊழ்வெல்லும் சக்தியதாய்
வந்தார் காந்தி!

பிறப்பெடுத்து மானிடத்தின்
பெருமை சேர்த்து
பெருமைபெறும் பாரதத்தைக்
கோயி லாக்கி
பிறப்பொன்று மனித குலம்
ஒன்றே யென்று
பிரிவில்லா உலகுக்கு
வேலி ஆனார்!

புதுயுகத்தின் நெடுங்கதவம்
திறந்து வைத்தார்;
பொன்யுகத்தின் பொற்கனவை
மலர வைத்தார்!

விதியுகத்தை அகிம்சையினால்
வென்று காட்டி
விதிவென்று வினைகடந்து
தேவன் ஆனார்!

கண்ணீரைத் தன்விழிக்கு
மாற்றிக் கொள்ளக்
கவலைகளைத் தன்தோளில்
சுமந்து கொள்ள
மண்ணுக்குள் சத்தியத்தை
விதைக்க, அண்ணல்
மறுபடியும் பிறப்பதுதான்
எந்த நாளோ?

## அங்குசம்– கைத்தடி!

தேசப் பிதாவே!

அய்யனே, உன் வாழ்வில்
அகிம்சையே 'அறத்துப்பால்!'
பொய்யாமை வழியில்
'பொருட்பால்!' இராப்பகலாய்

இந்திய சுதந்திரம்தான்
'இன்பத்துப் பால்!' எங்கள்
தந்தையே! உம் வாழ்க்கைத்
தடமெல்லாம் முப்பால்தான்!

ஈரங்கி உடுத்தியிருந்த
எங்கள்பிதாஉம் கைத்தடிமுன்
பீரங்கி யும்கூடப்
பேச்சிழந்து போயிற்று!

விண்ணளவு மதங்கொண்ட
'வெள்ளை' யானைக்கு
அண்ணல்உம் கைத்தடியே
அங்குசமாய் ஆயிற்று!

தேசப்பிதாவே-

'சுண்டைக்காய் மனிதருக்குச்
சுதந்திரம் கேடா?' என்று
வெண்டைக்காய் வாதம்செய்த
வெள்ளரிக்காயை உம்தம்

துண்டினால் துவையல் செய்தீர்
துவையலுக்கு உப்பு சேர்க்கத்
தண்டிக்குப் போனீர்; உம்கைத்
தடியினால் கடல் கடைந்தீர்!

உறங்கையில் நாட்டை எண்ணி
உரங்கையில் கொண்ட உம்கை
முருங்கையா முறிக்க? வெற்று
மூங்கிலா வளைத்துப் பார்க்க?

தேசப்பிதாவே-

அறங்கையில் ஏந்தி மாற்றார்
அரங்கையே ஆட வைத்தீர்!
வெறுங்கையைக் கொண்டே 'வெள்ளை'
வேங்கையை வீழ்த்தி வென்றீர்!

வீர வணக்கம்!

## நகலெடுத்த காந்தி

காந்தியை நகலெடுத்த
கண்ணியவான்; நாட்டில்
சாந்திநெறி தழைக்க - தருமச்
சக்கரமாய்ச் சுற்றியவர்!

தானுயர்ந்த பண்புகளால்
தலைநிமிர்ந்த லால்பகதூர்
வானுயர்ந்த இமயத்தின்
வாமன அவதாரம்!

நேருகண்ட கனவுகளை
நிலைக்கவைத்த சாஸ்திரி;
பாரதமாளி கையைப்
பழுதுபார்த்த மேஸ்திரி!

தாக்கவந்த பகைமலையைத்
தகர்த்த சிற்றுளி! நாட்டைக்
காக்கும் கடமையிலே
கண்துயின்ற கர்மவீரர்!

## ஈரோட்டில்
## தீச்சூடேற்று!

ஈரடியில் பொய்யாமொழி
ஈரோட்டு அய்யாவழி
இரண்டும் எங்களது இருவிழி
இனமானத் தமிழினத்தின் முகவரி!

பிறப்பால் மனிதர் சரிசமம் என்று
பெருமை தந்தது குறளேடு - அதை
மறுத்த இனத்தின் மமதை அடக்கி
மதிப்பைப் பெற்றது ஈரோடு!

ஒழுக்கம் மானம் பண்பா டென்று
உரைக்கும் வள்ளுவர் குறள்நாடி;
அழுக்கை விலக்கிக் கிழக்கை வெளுத்தது
அதுதான் பெரியார் வெண்தாடி!

குறள்மே டையினை ஒதுக்கி விட்டுக்
குறிமே டைக்கேன் அலைகின்றாய்!
இருளோ டென்ன உன் கூட்டு? - நீ
ஈரோட்டில் தீச்சூடேற்று!

# அண்ணா
# என்றொரு அற்புதம்!

அண்ணா நீயொரு அற்புதம் - நீ
அனைவரும் படிக்கும் புத்தகம்!
அண்ணா நீயொரு கனிமரம் - உன்
ஆற்றலில் நிமிர்ந்தது தமிழினம்!

உழுபவன் கால்களைத் தொழுதவன் - நீ
உழைப்பவர் தோள்களைத் துதித்தவன்!
அழுபவன் விழிகளைத் துடைத்தவன்
அடிமைத் தளைகளை உடைத்தவன்!

குள்ளம்தான் கட்டைவிரல்
என்ற போதும்
குனிந்துவரும் மற்றவிரல்
அதனி டத்தில்!

குள்ளம்தான் உன்னுருவம்
என்றா லும்நீ
குன்றுகட்குத் தலைமைதாங்கும்
இமயம் ஆனாய்!

அகங்காரம் கொள்ளாத
பொறுமை; என்றும்
ஆரவாரம் இல்லாத
எளிமை; எங்கும்

நகைமுகம்தான்; பகைமுகமே
இல்லை; உன்றன்
நகம்பட்டு எவர்க்குமிங்கே
காயம் இல்லை!

அண்ணா!
மேதை நீ பேசத்
தொடங்கிய பிறகுதான்
மேடைப் பேச்சுக்கு
மீசை முளைத்தது!

எதுகை மோனைகள் - உன்
இரண்டு உதடுகள்!
நதியா, நாக்கு? அது
நயாகரா அருவி!

கற்றுத் தேர்ந்த செந்தமிழும்
கவனம் பதிந்த ஆங்கிலமும்
உற்ற இரட்டை மொழியாக
உனது நாக்கில் வரும்போது -

தெற்குக் காவிரி ஊற்றெடுக்கும்;
தேம்சு நதிக்கரைக் காற்றடிக்கும்!

அண்ணா!

மூடத் தனங்களுக்கு
முதுகில் தொட்டில் கட்டிக்
கேடத் தனைக் குள்ளும்
கிழடு தட்டிப் போனவரை-

திசைகாட்டத் தெரியாத
திண்ணைப் பேச்சுகளை
அசைபோட்டுக் கொண்டு
அஃறிணையாய் ஆனவரை -

எழுத்தாலும் பேச்சாலும்
எழுப்பி நிற்க வைத்து
மொழிகாக்க இனம்காக்க
முன்வரிசைக் கழைத்து வந்தாய்!

கணித பின்னங்கள் போல்
காட்சிதரும் ஏழையரை
மனித பின்னங்கள் என்று
மதிப்பீட்டில் குறைத்த வரைக்

7

கண்டு கொதித்தாய், நீ!
கைகொடுத்து ஏழையரை
'சுண்டுவிரல் அல்ல நீ,
சுட்டுவிரல்' என்றுரைத்தாய்!

அண்ணா!

'தம்பிக்கு' மடல்கள் தீட்டி
தன்மான உணர்வை ஊட்டி
நெம்புகோல் கொடுத்து எம்மை
நிமிர்த்திய அன்னை நீதான்!

விருப்பங்கள் அழைத்துப் போகும்
வீதியை மாற்றி நாட்டில்
திருப்பங்கள் கொடுத்தாய் - புதிய
திசைகளைப் படைத்தாய்!

அண்ணா நீயொரு அற்புதம் - நீ
அனைவரும் படிக்கும் புத்தகம்!
அண்ணா நீயொரு கனிமரம் - உன்
ஆற்றலில் நிமிர்ந்தது தமிழினம்!

## அண்ணல் அம்பேத்கர்

'ஆதிக் குடிமகனை
ஆதிக்கக் குடிமக்கள்
வீதிக்கு அனுப்பிவிட்டு
வேற்றுமைகள் பேசுவதா?' - என

பாதிக்கப் பட்டவர்க்குப்
பரிந்துரை யானதுடன்
நீதிக்குக் குரல்கொடுத்து
நிமர்ந்தெழுந்தார் அம்பேத்கர்!

ஆண்டாண்டு காலம்
அன்னை நாட்டில்
அடிபதிக் கின்ற
மக்கள் பதிப்பில்

தீண்டாமை என்னும்
அச்சுப் பிழையைத்
திருத்தம் செய்திட்ட
தேவன் அம்பேத்கர்!





திருக்குலத்தார் தம்மைத்
தெருக்குலத்தா ராக்கியது
நரிக்குலத்தார் செய்த
நாடகம் என்பதனை

முகத்திரையைக் கிழித்து
முத்திரைபதித்த தவர்பத்திரிகை
பகுத்தறிவு வகுப்புகளின்
பாடநூல் களவை!

விலக்கிவைத்த ஊருக்கும்
விலகிநின்ற சேரிக்கும்
கலப்புமணம் செய்துவைத்த
கல்யாணப் பத்திரிகை!

'மகர் இனத்துத் தோழனே!
மனிதன்தான் நீயும்
மனம் தெளிந்து நிமிர்!
மற்றவனோடு நீ சரிநிகர்!

தடைகளைத் தகர்' - என
தன்னம்பிக்கை யூட்டிய
படைக்குல மறவர்நம்
பாபா அம்பேத்கர்!

'தீட்டு' என்று விலக்கிவைத்த
மேல் இனத்தார்
திருக்குலத்தார் இவரின்
திறம் அறிந்து

'தீட்டுஅரசியல்சட்ட'மெனத்
தேடிவந்து ஒப்படைத்தார்!
மேட்டுச் சிகரமானார்
மேதை அம்பேத்கர்!

முற்பட்ட சாதிகட்கே
மூலதனம் மூளையென்று
கற்பித்த தப்பிதத்தைக்
களைந்தெறிந்த மாமனிதர்!

எண்ணறிவில் எழுத்தறிவில்
நுண்ணறிவில் நூலறிவில்
விண்ணளவு உயர்ந்து நின்று
விஸ்வரூபம் காட்டியவர்!

'தடைகளைத் தகர்' என
தன்னம்பிக்கை யூட்டிய
படைக்குல மறவர் நம்
பாபா அம்பேத்கர்!

# காது வழித் தூது

கற்றலினும் கேட்டல் நன்று
என்னும் வாசகம் - இது
கல்விநிலை வளர்வதற்கு
சொன்ன சூசகம்!

பள்ளியினை விட்டுக் கொஞ்சம்
தள்ளிச் சென்றவர் - கல்விப்
பாதையிலே பாதித்தூரம்
வந்து போனவர்

புள்ளிகளாய் மாறிவிட்ட
பிள்ளைக் கோலங்கள் - அதைப்
புதுப்பிக்க மீண்டும் வரும்
வசந்த காலங்கள்!

காற்றுநுழை யாதஇடம்
தன்னிலும் கூட
கல்விநுழைந் தாகவேண்டும்
எண்ணமும் கூட!

ஏட்டுக்கல்வி என்பதினி
இவர்க்குச் சுமைதான்
இடையில்நின்ற பிள்ளைகட்கு
ஏற்ற தில்லைதான்!

பாட்டுக்கல்வி தானிவர்க்குப்
பாதை யாகுமாம்;
பாடமெல்லாம் காது வழித்
தூது போகுமாம்!

நாட்டுப்பாடல் என்பதுதான்
ஏற்றவழியாம் - நிலை
நாட்டும்பாடல் என்பதனால்
நல்ல முறையாம்!

துணைக் கண்டத்தில் நமதுதானே
புதிய முயற்சி - இந்தத்
தொண்டு வெற்றி பெற்றுவரும்
புதிய வளர்ச்சி!

## கட்டை விரல் 'கையெழுத்து'

கழிவறையில் துப்புரவு
செய்யும் தோழனே
கடற்கரையில் நொறுக்குத்தீனி
விற்கும் நண்பனே

பழுதுபார்க்கும் பட்டறையில்
வேகும் தம்பியே
பஞ்சுநூலை நூற்றுவிட்டு
ஓயும் தங்கையே

மாலைவரை பீடியினைச்
சுருட்டும் கைகளே
மளிகைக்கடை பொட்டலங்கள்
கட்டும் விரல்களே

வேலைகளில் ஈடுபட்டு
விலகும் விழிகளே
பாடநூலைக் கற்பதற்கு
உண்டு வழிகளே!

புல்லறுக்கும் பொன்னிகூட
கல்வி கற்கலாம்;
பூத்தொடுக்கும் பூங்கொடியும்
பாடம் படிக்கலாம்!

கல்லுடைக்கும் கந்தன்களும்
கற்கச் செல்லலாம்;
கட்டைவிரல் கையெழுத்து
கற்றுக் கொள்ளலாம்!

தேய்ந்தநாளை எண்ணிமனம்
தேம்பிட வேண்டாம்;
ஓய்ந்தநேரம் கிடைக்கும்போது
சோம்பிட வேண்டாம்!

வேலைகளில் ஈடுபட்டு
விலகும் விழிகளே;
பாடநூலைக் கற்பதற்கு
உண்டு வழிகளே!

# இனியவை நாற்பது

பன்னீர் செல்வம், உன்வய தென்ன?
பதினாறா? அதில் பழுதென்ன?
கண்ணீ ரைத்துடை கலக்கம் எதற்கு?
காலம் இருக்க கற்பதற்கு!

'நாற்றங்கால் பருவம்தான்
அரிச்சுவ டிக்கு
ஏற்றது என்கிறார்
நடேசன். 'நானோ

நாற்பது வயதைத்
தொடுகிறேன், கல்வியை
ஏற்பது எனக்கு
இயலுமா?' என்கிறார்.

தேய்ந்த நாட்களைத்
தினம் எண்ணித்
தேம்பிட வேண்டாம்;
உங்களுக்கு

ஓய்ந்தநேரம் எப்போது?
உட்காருங்கள் அப்போது!

கல்லா நாற்பது
கரைந்தது; இந்த
இன்னா நாற்பது
நீங்கள் முயன்றால்
இனியவை நாற்பது
ஆகும்; பயில்வீர்!

நடை வண்டிகளும்
படிக்க வரும் - அட
நரை முடிகளுக்கும்
படிப்புவரும்! - ஆம்
பிடிப்பு இருந்தால்
படிப்பு வரும்!

கரம்பு நிலம்
கரும்பு நிலம்
ஆகும் போது
கல்லா தார்
கற்றவ ராய்
ஆகலாமே!

## மனித பின்னங்கள்

கல்விக்குக் கரையில்லை;
கடலை விடவும் விரிவெல்லை!

கல்விக்குக் குலமில்லை;
கடைமகன் கற்கவும் தடையில்லை!

கல்விக்கு வயதில்லை;
காலம் பருவம் வரையில்லை!

கண்களுக்கு நரையில்லை;
கைகளுக்குச் சிறையில்லை!

●

கல்லாமையால் பலபேர்
கல்ஆமை போலானார்

கல்ஆமை அகலிகைகள்
கல்விமுயல் ஆவதெந்நாள்?

●

கல் ஆனைக்குக்
கரும்பு தந்த கதை
எல்லார்க்கும் தெரியும்;

இன்றைக்கு எழுத்தறிவு
கல்லானைக் கல்விக்
கரும்பு தின்னவைத்து
வல்லானாய் மாற்றுவதே
வயதுவந்தோர் கல்வியாகும்!



கணிதபின் னங்கள்போல்
கல்லாத மனிதர்களை
மனிதபின் னங்கள் என்று
மதிப்பீடு செய்கின்றார்!

மனிதபின் னங்கள்
மதிப்பீட்டில் உயர்வதற்கு
இனியேனும் முயன்று
எழுத்தறிவு பெறவேண்டும்!



உயிர்க்கல்வி இளமைக்கு
உரியதென்று கலைமகள்
உயிலெழுதி வைக்கவில்லை;
ஒரு வரம்பும் கட்டவில்லை!



கல்வி என்பது கற்கண்டு;
கற்கக் கற்கச் சுவையுண்டு!
எல்லாருக்கும் பங்குண்டு - அதை
எட்டிட ஆயிரம் வழியுண்டு!

# வாழும் வரலாறு:

## இலக்கியவீதித் தலைமுறையின் தலைமைக்கவிஞர்

## கவிஞாயிறு தாராபாரதி

- மண்ணில் கண் மலர்ந்த நாள் : 26.02.1947
- தொட்டில் பெயர் : துரை. இராதாகிருட்டிணன்
- சுட்டுப் பெயர் : தாராபாரதி
- அன்னை வயல் : புஷ்பம்
- தந்தை நிலம் : துரைசாமி
- தவழ்ந்த மண் : குவளை (திருவண்ணாமலை மாவட்டம்)
- கவிதை நடைவண்டி : இலக்கியவீதியில்
- மணந்த நாள் : 22.08.1974
- இல்வாழ்க்கைத்துணை : சந்தானலட்சுமி
- பிள்ளைத்தமிழ் : விவேகானந்தன்<br>லோகு துரை<br>ஆண்டாள்
- உடன் பிறப்புகள் : துரை. சீனிவாசன் (மலர்மகன்)<br>புலவர் துரை.மாதவன்
- கற்ற கல்வி : தொடக்க நிலை - குவளை<br>உயர்நிலை - கீழ்க்கொடுங்காலூர்
- ஆசிரியர் பயிற்சி : இராணிப்பேட்டை<br>சைதாப்பேட்டை
- ஊனமுற்றோர் சிறப்புப் பயிற்சி : மைசூர்
- பெற்ற பட்டங்கள் : பி.ஏ. (வரலாறு), எம்.ஏ. (தமிழ்) பி.எட்.
- தொழில் : ஆசிரியர் பணி
- விருது : டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது (தமிழக அரசு - 2000)
- பணிக்காலம் : 34 ஆண்டுகள்
- பணியாற்றிய பள்ளிகள் : சித்திரக்கூடம் (அச்சிறுப்பாக்கம் ஒன்றியம்)<br>பரனூர் (காட்டாங்கொளத்தூர் ஒன்றியம்)<br>காமராசபுரம் - கூடுவாஞ்சேரி

  

☐ குறிப்பிடத்தக்க செயல்கள் : இந்த மூன்று பள்ளிகளையும் ஒன்றியத்தின் சிறந்த முன் மாதிரிப் பள்ளிகளாக உயர்த்திப் புகழ் பரப்பியமை.

மாணவர்களின் பன்முகத் திறன்களையும் வளர்க்கும் கலைக்கூடங்களாகப் பள்ளிகளைப் பயன்படுத்தியமை.

தாழ்த்தப்பட்ட மாணவர்கள் மீது தனிக்கவனம் செலுத்தி உழைத்தமை, உயர்த்தியமை.

ஊனமுற்ற மாணவர்களுக்காக உருகிக் கரைந்தமை, வாய்ப்புகளை உருவாக்கித் தந்தமை.

☐ கல்விப் பணி : புதிய பாடத்திட்ட உயர்மட்டக் குழுவில், ஆசிரியர் கையேடுகள் தயாரிப்பில், வினா வங்கி உருவாக்கத்தில் பங்கு பெற்றமை.

☐ வானொலி - தொலைக்காட்சி : கல்வி ஒலிபரப்புகள், எல்லோர்க்கும் கல்வி,
சான்றோர் சிந்தனை, கவிதைத்துளி,
கவியரங்கங்கள், கவிதைப் பட்டிமன்றம்,
வள்ளுவர் காட்டும் வழி,
காண்போம் கற்போம், வாழ்க்கைக் கல்வி
சிறப்பு நிகழ்ச்சிகளில் பங்கேற்பு.

☐ சன் தொலைக்காட்சி : கவிராத்திரி (கவிக்கோ அப்துல் ரகுமானுடன்)
இன்தாம் - தமிழ் இணையம்
இவற்றில் கவிதைகள் வாசிப்பு

☐ பரிசுகள் - விருதுகள் : முதல் பரிசு - கல்லூரிக் கவிதைப்போட்டி
வெள்ளிப் பதக்கம் - கல்லூரிக் கட்டுரைப் போட்டி
தங்க மோதிரம் - தமிழ் எழுத்தாளர் சங்கம்
(வாசவன் விருது)
கண்ணதாசன் நினைவு விருது
(இலக்கியவீதி)
கவிஞாயிறு
(திருவள்ளுவர் இலக்கிய மன்றம் - வாணுவம்பேட்டை)

☐ காலத்தோடு கலந்த நாள் : 13.05.2000





கவிஞாயிறு

தாராபாரதி

படைப்புகள்

புதிய விடியல்கள்
(1982)

இது எங்கள் கிழக்கு
(1989)

விவசாயம் இவர் வேதம்
( வேளாண்மாமணி க. முத்துமல்லா பற்றியது)
(1992)

பண்ணைப்புரம் தொடங்கி பக்கிங்காம் வரை
( இசைஞானி இளையராஜா பற்றியது)
(1993)

விரல்நுனி வெளிச்சங்கள்
(2000)

தாராபாரதி கவிதைகள்
(2001)

பூமியைத் திறக்கும் பொன்சாவி
(2002)





# இன்னொரு சிகரம்

தூக்கம் தொலைத்த
இரவுகளில்
தாராபாரதி சேகரித்த
கவி விதைகளின்
'விதை உறக்கத்திற்கு'
உயிர் விழிப்பு.

தாராபாரதியின்
'எழுத்துகள்'
காகிதக் கிடங்குகளில்
ஆயத்தமாயிருக்கிற
ஆயுதங்களின் அணிவகுப்பு.

தூக்கத்தில்
தோய்ந்திருப்பவர்களுக்கான
பள்ளியெழுச்சி!

வாழ்வில்
துவண்டிருப்பவர்களுக்கான
படையெழுச்சி!




●இலக்கியவீதி இனியவன்●